# ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும்

இதிலடங்கிய விஷயங்கள் :

சிவராத்ரி கதை, மஹிமை பூஜாவிதி, அஷ்டோத்ரம்,

சிவாலய ஸேவாவிதி

முதலியன.

ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ வெ. ஸோமதேவ சர்மா

வெளியீடு :

பவானி புக் சென்டர்

19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,

சென்னை - 600 033.

★ ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும் ★

பதிப்புரிமை : பவானி புக் சென்டர் / பதிப்பு: பிப்ரவரி 1986 / வெளியீடு : பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை-600 033 / அச்சிட்டோர்: ஸ்ரீ சுரபி பிரிண்டர்ஸ், சென்னை-600 033 / விலை ரூ. 2.00

# சிவராத்ரி

நமது நாட்டு வ்ரதங்களில் நவராத்ரி, சிவராத்ரி என்று இரண்டுமே ராத்ரி என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. முன்னது அம்பிகையைப் பற்றியது. பின்னது சிவனைப் பற்றியது. ராத்ரி காலத்தில் பூஜை செய்யவேண்டும் என்பதை இவை காண்பிக்கின்றன. ராத்ரி என்பது யாதொரு வேலையும் செய்யாமல் இருள் சூழ்ந்து உறங்கும் காலமாகும். பகலெலாம் வேலை செய்து நாம் தினந்தோறும் இரவில் உறங்குகிறோம். அப்படி உறங்கி எழுந்தால்தான் உடலுக்கு ஆரோக்யமும் சுறுசுறுப்பும் ஏற்படுகிறது. தூக்கம் இல்லாவிடில் உடலும் மூளையும் சுறுசுறுப்பாக வேலை செய்வதில்லை. நமது நன்மையை நாடி ஸர்வேச்வரன் நமக்குத் தந்த வரன் தூக்கமாம். ஆனால் அளவு கடந்தும் தூங்கக்கூடாது. தீர்க்க நித்ரை என்று மரணத்திற்குப் பெயர்.

எதனால் தூக்கம் வருகிறது? தூக்கம் அவசியந்தானா என்று விசாரித்த சிலர், இது ஒரு அரிய பாக்யம்; இன்றியமையாதது என்ற முடிவிற்கு வந்தனர். நமது உபநிஷத், "ஸ்வம் அபீதோபவதி" தன்னை அடைகிறான்; இதைத் தூங்குகிறான் என வேதம் மறைவிடமாகக் கூறுகிறது என்கின்றது. பகலெலாம் அலைந்து திரிந்த நமது இந்த்ரியங்களும், உடலும் சக்தியை இழந்து ஓய்வடைகின்றன. அச் சமயம் நமது ஹ்ருதயத்திலே உள்ள ஈச்வரன் நம் ஜீவனை அணைத்து அருகில் அமர்த்துகின்றான். அச்சமயம் கண் காண்பதில்லை. காது கேட்பதில்லை. புத்தி ஒன்றையும் நினைப்பதில்லை. சுகமாகத் தூங்கினேன் என எழுந்த பின் கூறுகிறோம்.

அச்சமயம் நாம் இழந்த சக்தியைப் பகவான் நமக்கு அளித்து அனுப்புகிறார். இப்படி இம் மண்ணுலகும், விண்ணுலகும் ஒரு ஸமயம் வேலையை விட்டு இறைவனிடம் ஒடுங்குகிறது. இதுவே மஹாப்ரளயம் எனப்படும். நாம் தினந்தோறும் தூங்குவது தைநந்தினப்ரளயமாம். நாம் பகலில் வேலை செய்து களைத்துப் போவதுபோல் உலகெலாம் ஸ்திதி காலத்தில் வேலை செய்து களைப்படைகிறது. அந்த ப்ரபஞ்சத்திற்கு இழந்த சக்தியை அளிப்பதற்காகச் சிவன் தனக்குள் லயப்படுத்துகிறார். இதுவே ப்ரளயம். ப்ரளயத்தில் இறைவனைத் தவிர ஒரு வஸ்துவும் காணப்படாது. மெழுகில் தங்கப் பொடிகள் உருத்தெரியாமல் மறைவதுபோல் உலகம் சிவனது சக்தியில் ஒளிந்திருக்கும். சிவனது சக்தியை ப்ரக்ருதி என்றும் மாயை என்றும் கூறுவார்கள். தட்டானைப்போல் பரமன் மெழுகு போன்ற ப்ரக்ருதியில் தங்கப்பொடி போன்ற ஜீவர்களை ஒடுக்குகிறார். தீயில் மெழுகை உருக்கினால் தங்கம் தனியே வருவது போல் ஸ்ருஷ்டி காலத்தில் ஜீவர்கள் கர்மாவிற்கேற்றபடி உடலெடுக்கிறார்கள்.

ராத்ரியில் ஸுகமாகத் தூங்குகிறோம். தூக்கம் வராவிடில் கஷ்டப்படுகிறோம். தூங்க மருந்தும் சாப்பிடுகிறோம். காலையில் எழுந்து அலைந்து கஷ்டப்படுகிறோம். ஆதலால் இரவில் தூக்கம் அவச்யமாக வேண்டியதுபோல் உலகிற்கும் ஒரு ப்ரளயம் மிக அவச்யமாக வேண்டியிருக்கிறது. அப்படி உலகம் சிவனிடம் ஒடுங்கிய நாளே சிவராத்ரி. அன்று சிவனைத் தவிர வேறு ஒரு வஸ்துவும் இல்லை. ஆனால் சிவனை விட்டு என்றும் பிரியாத சக்தி மாத்திரம் இருப்பாள். அன்னையான உமையவள், குழந்தைகளான நம்பொருட்டு சிவனை அச்சமயம் பூஜித்தாள். சிவ பூஜை இல்லாவிடில் நாம் வாழ முடியாது. உலகம் ஒடுங்கியபொழுது சிவை சிவனை நாம் சிவமாக-க்ஷேமமாக இருப்பதற்காகப் பூஜித்த தினமே சிவராத்ரி யாகும். அது மாசி மாத க்ருஷ்ணபக்ஷம்.

நமக்காக தேவி சிவனைப் பூஜித்த தினத்தில் நாம் சிவனைப் பூஜித்தால் நித்யம் பூஜிப்பதைவிட பன்மடங்கு பயனைத் தரும். அன்று சுத்த உபவாஸமிருந்து இரவு கண் விழித்து நான்கு காலப் பூஜை செய்பவருக்கு முக்தி தரவேண்டும் என தேவி வேண்டினாள். சிவனும் அங்ஙனமே வரம் தந்தார். நித்ய சிவராத்ரி, பக்ஷ சிவராத்ரி, மாஸ சிவராத்ரி, யோக சிவராத்ரி, மஹா சிவராத்ரி என ஐந்து வகைச் சிவராத்ரிகள் உண்டு. ஒவ்வொரு சதுர்த்தசியிலும் சிவ பூஜை செய்து ஒரு வருஷத்தில் 24 சிவராத்ரி பூஜை செய்வது, நித்ய சிவராத்ரி எனப்படும். தை மாத க்ருஷ்ண ப்ரதமை முதல் 13 நாள் நித்யம் ஒரே வேளை பூஜித்து சதுர்த்தசியில் பூஜை செய்வது பக்ஷ சிவராத்ரி எனப்படும். மாசி க்ருஷ்ண சதுர்த்தசி, பங்குனி முதலில் வரும் த்ருதீயை, சித்திரை க்ருஷ்ண அஷ்டமி, வைகாசி முதல் அஷ்டமி, ஆனி சுக்ல சதுர்த்தி, ஆடி க்ருஷ்ண பஞ்சமி, ஆவணி சுக்ல அஷ்டமி, புரட்டாசி முதல் த்ரயோதசி, ஐப்பசி சுக்ல த்வாதசி, கார்த்திகை முதல் சப்தமியும்-அஷ்டமியும், மார்கழி இருபக்ஷ சதுர்த்தசிகள், தை சுக்ல த்ருதியை இவை மாஸ சிவராத்ரி எனப்படும். ஸோமவாரத்தன்று அறுபது நாழிகையும் அமாவாஸை இருந்தால் அது யோக சிவராத்ரி. ஒவ்வொரு வருஷமும் மாசி க்ருஷ்ண சதுர்த்தசி மஹா சிவராத்ரி எனப்படும்.

அன்று நாம் செய்யவேண்டியதென்ன? அதிகாலையில் எழுந்து ப்ராத ஸ்நாநம் செய்து, நித்ய கர்மாக்களை முடித்துவிட்டு சிவாலயம் சுத்தமாக இருந்தால் அங்கு சென்று பகவானுடைய சன்னிதியில் அன்று சிவராத்ரி வ்ரதம் அனுஷ்டிக்கப் போவதாகவும், அது விக்நமில்லாமல் பூர்த்தியாகவேண்டும் என்றும் ப்ரார்த்தித்து வரவேண்டும். வேதம் அறிந்தவர் அன்று ஸதா, ஸ்ரீ ருத்ர பாராயணம் செய்யவேண்டும்.

பஞ்சாக்ஷரி உபதேசம் ஆனவர் ஒரு சுத்தமான இடத்தில் அமர்ந்து, ஸதா பஞ்சாக்ஷரீ ஜபம் செய்யவேண்டும். அதில்லா

தவர் ஸதா நேரமும் சிவசிவ என்று ஜபிக்க வேண்டும். விபூதி, ருத்ராக்ஷம் அணியவேண்டும். இரவும் பகலும் சுத்த உபவாஸம் இருக்கவேண்டும். ஜலம் கூடச் சாப்பிடக்கூடாது. சக்தி இல்லாதவர் ஒரே வேளை உப்பில்லாத பத்தில்லாத பலஹாரம் உட்கொள்ளலாம் ஸத்துமாவை வெல்லத்துடன் கலந்து அல்லது வள்ளிக்கிழங்கை உப்பில்லாமல் வேகவைத்து உண்பது முற்காலப் பழக்கம். எந்த வ்ரத தினங்களிலுமே தாம்பூலம், சந்தனம், க்ஷவரம், எண்ணெ, ஸ்திரீ-புருஷ ஸங்கமம், வீண்பேச்சு, விளையாட்டு, கடுமையான வேலை, கோபம், சண்டை முதலியன கூடாது. புருஷர்கள்தான் லிங்க பூஜை செய்யலாம். பஞ்சாயதன பூஜை எடுத்துக்கொண்டவர் நித்ய பூஜை தவிர இரவில் நாலுகாலப் பூஜை செய்ய வேண்டும். ஒரு காலமேனும் இரவில் சிவபூஜை அவச்யம் செய்யவேண்டும்.

அபிஷேக ப்ரியன் சிவன், அலங்கார ப்ரியன் விஷ்ணு. சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்யச் செய்ய நமது தாபம் அகலும், நோய் நீங்கும், மனம் தெளியும். ஸகல நன்மைகளும் உண்டாகும்.

நல்ல எண்ணெய், பஞ்சகவ்யம், பஞ்சாம்ருதம், நெய், பால், தயிர், தேன், கரும்புச்சாறு, இளநீர், பழரஸம், சந்தனம், ஐந்து கலச தீர்த்தம்.

இந்த க்ரமத்தில் இந்த வஸ்துக்களால் மஹன்யாஸ ஏகாதச ருத்ர ஜபத்துடன் அபிஷேகம் செய்ய வேண்டும். பூஜை செய்யாதவர், பூஜை செய்யும் இடத்தில் இவைகளை அளித்து அபிஷேக தர்சனம் செய்யவேண்டும். சீக்ரமாக ப்ரஸாதம் செய்யும் மூர்த்தி சிவன். அதேபோல் சீக்ரம் கோபமும் உண்டாகும். ஆதலால் அபிஷேக த்ரவ்யங்களும் பில்வமும் புஷ்பமும் சுத்தமாக இருக்கவேண்டும். பூஜை செய்பவரும் சுத்தனாக இருந்து மனம், வாக்கு, உடல் மூன்றும் ஒன்றுபட்டு நிதானமாகப் பூஜை செய்யவேண்டும்.

தெரிந்தோ, தெரியாமலோ, ச்ரத்தையுடனே, ச்ரத்தை இல்லாமலோ, ஆசாரத்துடனே, ஆசாரமில்லாமலோ சிவ பூஜை செய்தால் சிவலோகம் அடைவான் என புராணங்கள் கூறுகின்றன. இறக்கும்போது ஒரு வேடன் ஆஹர, ப்ரஹர, ஸம்ஹர, விஹர, அதாவது வழியில் போகின்றவரை இழுத்து வா, அடி, கொல்லு, அவன் பொருளைக் கொண்டு இன்பம் அடை என்று கூறி இறந்தான். அவன் மஹா பாபியானுலும் அந்த நாலு சொற்களிலும் ஹர, ஹர, ஹர, ஹர சொன்னதால் அவனுக்கும் கைலாசம் அளித்தார் சிவன். கண்ணப்பன் எச்சில் ஜலத்தால் சிவனுக்கு அபிஷேகம் செய்து கடித்து ருசிபார்த்த மாம்ஸத்தை நிவேதனம் செய்து, தன் காலால் லிங்கத்தின் சிரஸில் உள்ள நிர்மால்யத்தைத் தள்ளினுன். அவனுக்கும் நற்கதி அளித்தார். இவைகள் சிவ பூஜையின் பெருமையையும், சிவ நாமாவின் பெருமையையும் விளக்கும் கதைகள். நாமும் அப்படிச் செய்யவேண்டும். அப்படி அநாசாரத்துடன் பூஜை செய்தாலும் ஏற்றுக்கொள்வார் சிவன் என்று கருதலாகாது.

முதல் வேடன் ஆ ஹர என்று கூறி இறந்து விட்டான். பிறகு யாதொரு பாபமும் செய்யவில்லை. பின்னவன் ஆசாரத்தை அறியாததுடன் அன்பால் தன் கண்ணைப் பிடுங்கிச் சிவார்ப்பணம் செய்தான். அவ்விரண்டும் நம்மால் முடியாது. ஆதலால் நாம் சுத்தனுக சுத்தனுக இருந்து பூஜை செய்யவேண்டும்.

# 1. சிவராத்ரி கதை

சிவ புராணம், லிங்க புராணம், ஸ்காந்தம், பாத்மம் முதலிய 10 புராணங்கள் சிவனின் பெருமையைக் கூறுகின்றன. ஆங்காங்கு பல கதைகள் உள. இங்குள்ளது ஸ்காந்த கதையாம். முன்னெரு ஸமயம் குருத்ரோஹீ என்றேர் வேடன் இருந்தான். அவன் பலருக்கும், தன் பெற்றேருக்கும்

த்ரோஹம் செய்து இப் பெயரைப் பெற்ருன். மிக க்ரூரமான செயல் உள்ளவன் ஆதலின் க்ரூரன் என்றும் அவனை அழைப்பார்கள். பலரிடம் முன்பணம் பெற்று, சொன்னபடி அவர்களுக்கு மாம்ஸம் தராமல் ஏமாற்றி வந்தான். வ்யாபாரிகள் அனைவரும் ஒன்று கூடி அவனைப் பிடித்துச் சிறையில் அடைப்பதுபோல் ஒரு சிவாலயத்தில் அடைத்து, பகலெலாம் அவன் வெளியில் வராதபடி காவல் போட்டனர். அன்று மஹாசிவராத்ரி. விபூதி, ருத்ராக்ஷம் அணிந்து பலர் சிவ ஸன்னதியில் சிவசிவ என்று கூறினர். க்ரூரன் இடமாகவும், வலமாகவும் ஆலயத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான். பக்தர் சொல்லும் சிவ நாமத்தைக் கேட்டான். விளையாட்டாக இவனும் சிவ சிவ என்ருன். இரவிலே காடு சென்று வேட்டையாடி மாம்ஸம் கொண்டு வருவதாகக் கூறினுன். வியாபாரிகள் அனைவரும் அவனை விடுவித்தனர்.

ஒரு நதியைத் தாண்டிச் சென்று கீழே வலையை விரித்து மரத்தின் மீது ஏறினுன். அவனை அறியாமல் ஸத்துக்களின் சேர்க்கையால் சிவ சிவ என்று கூறினுன். முதல் யாமத்தில் ஒரு ப்ராணி அங்கு வரும் சப்தம் கேட்டது. ஆங்குள்ள தழைகளை உருவி எறிந்து அதைப் பார்த்தான். ஸ்வயம்புவாய்த் தோன்றிய பில்வ மரத்தின் கிழிருந்த லிங்கத்தின் மீது அவை விழுந்தன. உடனே அதைக் கொல்ல வில்லம்புடன் கீழே இறங்கினுன். அங்கு வந்த பெண்மான்மீது அம்பை விட ஆரம்பித்தான். அந்த மான் மனிதரைப்போல் பேச ஆரம்பித்தது. வேட! என்னை ஏன் கொல்கிருய்? என்று கேட்டது. எனது மக்களைக் காக்கவே உன்னைக் கொல்கிறேன். இதுவரை பல ம்ருகங்களைக் கொன்றேன். ஒன்றேனும் உன்னைப்போல் பேசியதில்லை... நீ யார்? மனிதனைப்போல் எப்படிப் பேசுகிருய்? என்று கேட்டான்.

வேட! நான் ஒரு அப்ஸரஸ். அழகில் சிறந்த என்னைக் கண்டு ஹிரண்யாக்ஷன் என்ற அஸுரன் மோஹம் அடைந்

தான். நாங்கள் ஒன்றுகூடி பலகாலம் சிற்றின்பத்தை அனுப வித்தோம். சிவ ஸன்னதிக்கு யான் செல்லவேண்டியதை மறந்தேன். ம்ருக ஸங்கத்தில் ஈடுபட்ட எங்களைப் பன்னிரண்டு ஆண்டு ம்ருகமாகவே இருந்து பின்னர் தன் ஸன்னதிக்கு வரும்படி கூறினார். ஆதலால் ம்ருகமான நான் இவ்வுடலை விட்டுவிட விரும்புகிறேன். ஆனால் உன்னைப் போலவே குழந்தைகளிடம் ஆசை இருப்பதால் அவர்களைப் பார்த்துச் சொல்லிவிட்டு வருகிறேன் என்றது அந்தப் பெண் மான்.

மானே! நானும் என் குடும்பமும் பசியால் வருந்துகிறோம். நீ திரும்பி வருவாய் என எப்படி நம்புவது என்றான் வேடன். ஸத்யத்தாலல்லவா உலகம் நிலைத்திருக்கிறது! ஸத்யம் செய் கிறேன் கேள். வேதியனாகப் பிறந்து வேதம், ஸந்த்யாவந்தநம், ஆசாரம் முதலியவைகளை விட்டவன். எந்த நரகத்திற்குச் செல் வானோ அந்த நரகத்திற்குச் செல்வேன். நான் காலையில் வரா விடில் நாஸ்திகன், தீட்டு அன்னத்தைச் சாப்பிட்டவன், தானம் செய்பவனை வேண்டாமெனத் தடுப்பவன், தேவஸ்வம், குரு சொத்து, ப்ராம்மணன் சொத்து இவைகளை அபஹரிப் பவன், தீபத்திலிருந்து தீபம் ஏற்றுபவர், பதி த்ரோஹம் செய் பவள், கட்டின மனைவியைக் காரணமின்றி விரட்டியவர் முதலி யவர்கள் செல்லும் நரகத்திற்குச் செல்வேன் என்று அந்தப் பெண் மான் கூறிற்று.

க்ரூரனது மனம் இளகிற்று. சிவராத்ரி பகலில் சிவாலய வாஸம், உபவாஸம், சிவ சிவ என்றது, மாலையில் முழுகி பில்வ மரத்தில் ஏறியது, பில்வ தளைகளை உருவி அருகிலுள்ள சிவ லிங்கத்தின் மீது அறியாமலேயே எறிந்தது - இந்தப் புண் யங்களால் அவனது பாபத்தில் கால் பங்கு அகன்றது. அதனால் மான் கூறிய தர்மச் சொற்களாலும் அவன் கருணையுடன் அந்த மானைக் காலையில் வா என்று கூறி அனுப்பினான். மறுபடியும் அந்தப் பில்வ மரத்தில் ஏற இரண்டாவது யாமத்தில் மற்றொரு ம்ருகம் வரும் சப்தத்தைக் கேட்டான். அந்தத் திக்கிலுள்ள

தழைகளை உருவி எறிந்தான். இறங்கி வந்து இரண்டாவது மானையும் அடிக்க ஆரம்பித்தான். அதுவும் முன் மானைப் போல் பேசிற்று. தானும் காலையில் வருவதாகக் கூறிச் சில சபதங்களைச் செய்தது. அரசனாகப் பிறந்து போருக்குப் பயந்தவனும், குடிகளைக் காக்காதவனும் செல்லும் நரகத்தை அடைவேன். காலையில் வராவிடில் பதியை விட்ட பரபி, ஒரு காலால் மற்றொரு காலைத் தேய்ப்பவன், வேதத்தை அபஸ்வரமாகச் சொல்பவன், பொய் ஸாக்ஷி கூறுபவன், நல்ல கார்யங்களுக்கு விக்னம் செய்பவன், ஏகாதசியில் புஜிப்பவன் ஆகியவர் செல்லும் நரகத்திற்குச் செல்வேன் என்றது. அந்த மானையும் கொல்லாமல் விட்டு மறுபடியும் மரத்தில் ஏறினான்,

மூன்றாவது யாமத்தில் மற்றொரு திக்கில் சப்தத்தைக் கேட்டு ஆங்குள்ள தழைகளை உருவி எறிந்து மானைக் கண்டு கீழே இறங்கினான். முன் சென்ற இரண்டிற்கும் கணவனான புருஷ மான் அது. எனது அரிய மனைவிகள் எங்கு சென்றனரோ? மனைவியே தக்க துணை! மனைவியே உற்ற தோழன்! மனைவியில்லா மனை பாழ்! என்று பலவாறு புலம்பிக் கொண்டு வரும் மானை அடிக்க ஆரம்பித்தான். அஃதும் மற்ற மான்களைப் போல் பேசி மனைவியிடம் மக்களை ஒப்புவித்துக் காலையில் வருவதாகக் கூறிற்று. அப்படித் தான் வராவிடில் விஷ்ணு நிந்தை, சிவ நிந்தை செய்பவன், பிறர் மனைவியிடம் ஆசை கொண்டவன், பசுவைக் காலால் உதைத்தவன், கர்வமுள்ளவன், லோபி, பிறரை நிந்திப்பவன், நன்றி மறந்தவன், கன்யகையைக் கிழவனுக்கு அளித்தவன் ஆகியோர் பெறும் நரகத்தை அடைவதாகக் கூறிச் சென்றது. முன்போல் அவன் மரத்தில் ஏறினான்.

நான்காவது யாமத்தில் மூன்று மான்களும் குழந்தைகளுடன் வந்தன. அந்தச் சப்தத்தைக் கேட்டு முன்போலவே இலைகளை உருவி எறிந்து வழக்கப்படி வாயால் சிவ சிவ என்று கூறி இறங்கினான். நான்கு யாமங்களிலும் கண் விழித்து உண

வின்றிச் சிவ சிவ என்று பில்வத்தை ஸ்வயம்புவான சிவலிங்கத்தின் மீது எறிந்த புண்யத்தால் அவன் பாபம் அனைத்தும் அகன்றது., மனந்தெளிந்தது. அந்தோ! ஒரு ஜாண் வயிற்றை வளர்க்க எத்தனை ஜீவன்களைக் கொன்றேன்? கேவலமான மான் கூறும் தர்மம் நமக்குத் தோன்றவில்லையே! என்று வருந்தினான். இதற்குள் குட்டிமான் என்னைக் கொல், என் பெற்றோர் பிழைத்திருக்கட்டும் என்று முன் வந்தது. பெண் மான்கள் எங்களை முன்னே கொல், குழந்தைகளும் பதியும் பிழைத்திருக்கட்டும் என்றன. ஆண் மானோ குடும்பத் தலைவனான நான் அவர்களைக் காக்க வேண்டும். அவர்களை விட்டு என்னைக் கொல் என்றது. மரணத்திற்கு அஞ்சாத மான்களின் த்யாகம் வேடனுக்கு ஆச்சர்யத்தை அளித்தது. வில்லையும், அம்பையும் முறித்தெறிந்தான். இனி யான் எதையும் கொல்வதில்லை என ஸத்யம் செய்தான். ம்ருகங்களின் ஸத்யத்தைக் கொண்டாடினான். நீங்கள் எனக்குக் குரு என்று வலம் வந்து வணங்கினான்.

உடனே ஆகாசத்திலிருந்து புஷ்பமழை பொழிந்தது. சிவ தூதர் விமானத்துடன் வந்து 'வேட! உனது சிவராத்ரி வ்ரதத்தால் சிவன் ஸந்தோஷம் அடைந்தார். உன்னை கைலாஸத்திற்கு அழைக்கிறார், வா' என விமானத்திலேற்றி வேடனை அழைத்துச் சென்றனர். அந்த மான்களை ம்ருகசீர்ஷம் என்ற நக்ஷத்திர வடிவமாக்கினார்கள். வ்ரதத்தின் மஹிமையை உணராத வேடன் தற்செயலாக அதை அனுஷ்டிக்கும்படி நேர்ந்ததற்கே இந்தப் பாக்யம் என்றால் அறிவுடன், பக்தி ஆசாரத்துடன் இதை அனுஷ்டிப்பவர் ஸத்கதி பற்றிக் கூறவும் வேண்டுமா? கோடி ஏகாதசியின் புண்யத்தைத் தரும் ஒரு சிவராத்ரி வ்ரதம். ஆயிரம் ஆண்டு காசி வாஸ பலத்தைத் தரும். லக்ஷம் ஜன்மாஷ்டமீ வ்ரத பலனை அளிக்கும் இது.

2. திவோதாஸன் என்ற ஸூர்யகுல அரசன் மதயந்தி என்ற மனைவியுடன் மனு நீதி தவறாமல் மாநிலத்தை ஆண்டு

வந்தான். ராக்ஷஸர் இருவர் அரசனுடன் போர் புரிய வந்தனர். மூத்தவனைக் கொன்றான் மன்னன். பயந்து ஓடினான் இளையவன். அரசனுக்குக் கபடமாக ஒரு தீங்கை இழைக்கக் கருதினான். அரசனது அரண்மனைக்குள் புகுந்து சமையல்கார வேடந்தரித்து பாக வேலைக்கு அமர்ந்தான். ஒரு நாள் மன்னனுடன் வஸிஷ்டர் புஜிக்கும்போது ஆஹாரத்துடன் மனித மாம்ஸத்தைக் கலந்தான். இலையில் இடப்பட்ட மாம்ஸத்தைக் கண்ட வஸிஷ்டர் கோபங் கொண்டு மன்னனை மனித மாம்ஸத்தை உண்ணும் அரக்கனாகும்படி சபித்தார். இதைக் கண்டு அரக்கன் தனது இஷ்டம் பூர்த்தியானது என ஸந்தோஷமாகச் சென்றான். குற்றமற்ற தன்னைச் சபிப்பது அநீதி என அரசன் முனிவரைச் சபிக்கக் கையில் ஜலத்தை எடுத்தான். மதயந்தி ஓடிவந்து நாத! குருவைச் சபித்தால் குலம் அழியுமே! எனச் சாந்தப்படுத்தினாள். அந்த ஜலத்தைத் தன் காலிலேயே விட்டான் அரசன். அது காலில் ஒரு தோஷத்தை உண்டு பண்ணினதால் கல்மாஷபாதன் என்று காரணப் பெயர் பெற்றான். உண்மையை உணர்ந்து முனிவர் 12 ஆண்டில் சாபம் அகலும் என்று அருள் புரிந்தார்.

அவன் அரக்கனாகிக் காட்டில் திரியும்போது ஒரு பிராம்மண தம்பதிகளைக் கண்டான். அஸுர குணத்தால் அந்தணனை அடித்துத் தின்றான். அவர் மனைவி, "நீ உண்மை அசுரனில்லை, அரசன், என்னைக் கொல்; பதியை விடு" என்று எவ்வளவு வேண்டியும் கேட்கவில்லை. பதியுடன் ஸதியும் இறந்தாள். பன்னிரண்டு ஆண்டு கழிந்தபின் திவோதாஸன் சாபம் அகன்று அரசன் ஆனான். ஆயினும் ப்ரும்மஹத்தி பாபம் அவனைச் சூழ்ந்தது. என் செய்வது என்று அவன் தவித்தான்.

கருணை மூர்த்திகளான மஹரிஷிகள் அவனைச் சிவராத்ரி யன்று கோகர்ண க்ஷேத்ரம் சென்று சிவராத்ரி உபவாஸம் இருந்து நாலு காலப் பூஜையையும் தரிசிக்கச் சொன்னார்கள்.

அவனும் அப்படியே செய்து பாபம் அகன்று நாட்டிற்கு வந்து தானும் சிவராத்ரி வ்ருதம், அனுஷ்டித்து, குடிகளையும் அனுஷ்டிக்கும்படி செய்தான். ப்ரும்மஹத்தி பாபத்தையும் அகற்ற வல்லது சிவராத்ரி வ்ரதம் என்றால், மற்ற பாபம் அகலக் கேட்க வேண்டுமா?

3. ஸுகுமாரன் என்ற துஷ்ட ப்ராம்மணன் அழகில் சிறந்தவன். ஸங்கீதத்தில் கரை கண்டவன். ஆனால் குலத்திற்கேற்ற குணமில்லாதவன். பல குல ஸ்த்ரீகளைக் கெடுத்தான். அரசன் அவனை நாட்டை விட்டு விரட்டினான். காட்டில் சென்று நீச ஸ்த்ரீகளுடன் சேர்ந்து வாழ்ந்தான். ஒருநாள் அரசனது காவலாளிகள் இவனைப் பிடிக்க வந்தார்கள். ஸுகுமாரன் பயந்து ஓடி ஒரு கானகத்தில் தங்கினான். அங்கு ஒரு சிவாலயத்தில் சிவராத்ரியாதலால் விசேஷப் பூஜை நடந்தது. அன்றிரவெல்லாம் பூஜையைப் பார்த்துப் பக்தனைப் போல் சிவ சிவ என்று கூறி ஸமயம் பார்த்துத் திருடக் கருதினான். அவன் திருடுவதற்கு முந்தியே ஆயுள் முடிந்ததால் யமதூதர் வந்து அவனைச் சிவலோகத்திற்கு அழைத்துச் சென்றனர். சிவராத்ரி பூஜா தர்சனத்தாலே ஸுகுமாரன் செய்த ஸகல பாபங்களும் அகன்றன. சிவ சிவ என்று கூறியதால் சிவலோகமும் கிட்டியது.

சிவராத்ரி வ்ரதத்தைச் சிவராத்ரி முதல் ஒவ்வொரு மாதத்திலும் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் செய்து 21 மாதமான பின் வ்ரத உத்யாபனம் செய்ய வேண்டும். மாதா மாதம் பூஜை செய்யவும் சிவராத்ரி பூஜை செய்து அர்க்யம் அளிக்கவும் உபாத்யாயர் உதவியைத் தேடாமல் தானே செய்து கொள்ளும்படி கல்பத்தை எழுதுகிறோம். ஆனால் உபாத்யாயருக்குத் தக்ஷிணை கொடுக்கத் தவறக்கூடாது. கிடைத்தால் அவரைக் கொண்டு செய்வதே உத்தமம். விஷயத்தை அறிய இது முக்கியமானது.

ஸ்த்ரீகள் ஸுமங்கலிகளானால் புருஷன் செய்யும் பூஜைக்குப் பணிவிடை செய்தாலே பாதிப் புண்யம் உண்டாகும். பதியைச் சிவபூஜை, சிவராத்ரி பூஜை செய்யத் தூண்டலாம். விதவைகளானால் சிவலிங்கத்திற்குப் பதில் ருத்ராக்ஷத்தை அல்லது விக்ரஹத்தை வைத்துக் கொண்டு பூஜை செய்ய வேண்டும்.

# பூஜா ஸங்கல்பம்

க2, கர்ஜரிகாய். க3 கஜம். க4. கநம் எனக் கவனித்து உச்சரிக்கவும்.

விக்நேச்வர பூஜை முடித்து:—ஓம் சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்—ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே-ஓம் பூ: பூர்புவஸ்ஸுவ ரோம், மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீபரமேச்வர ப்ரீத்யர்த்தம் சுபே சோபநே முகூர்த்தே ஆத்யப்ரும்மண: த்விதீயே பரார்த்தே ச்வேத வராஹ கல்பே வைவஸ்வத மன் வந்தரே அஷ்டாவிம்சதி தமே கலௌ யுகே பிரதமே பாதே ஜம்பூ த்வீபே பாரத வர்ஷே பரத கண்டே மேரோ : தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமாநே வ்யாவ ஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணாம் மத்யே (அந்தந்த வருஷத்தின் பெயர் பக்ஷம் திதி வாரம் நக்ஷத்ரம் இவைகளைக் கூறுக. இங்கு இவ் வருஷத் திதிகளே குறிப்பிட்டிருக்கின்றன. ——) நரமஸம்வத்ஸரே உத்தராயணே சிசிரரிதௌ கும்ப மாஸே க்ருஷ்ண பக்ஷே சதுர்த்தச்யாம் சுபதிதௌ ——வாஸர—— நக்ஷத்ர யுக்தாயாம் சதுர்த்தச்யாம் சுபதிதௌ சிவராத்ரி புண்யகாலே மம ஜன்மாப்யாஸாத் ஜன்ம ப்ரப்ருப்தி ஏதத் க்ஷண பர்யந்தம் பால்யே வயஸி கௌமாரே யௌவநே வார்த தக்யே ச ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி அவஸ்தாஸு மத்யே

ஸம்பாவிதாநாம் ஸர்வேஷாம் பாபாநாம் ஸத்ய: அபநோத நார்த்தம் ஸ்ரீ ஸாம்ப ஸதாசிவ ப்ரஸாதேந ஸகுடும்பஸ்ய மம தர்ம அர்த்த காம மோக்ஷ சதுர்வித பல புருஷார்த்த ஸித்யர்த்தம் க்ஞாந வைராக்ய மோக்ஷ ப்ராப்த்யர்த்தம் சிவராத்ரி பூஜாம் கரிஷ்யே.

(கை அலம்பி விக்நேச்வரரை யதாஸ்தாநம் செய்து கலச பூஜை:- பஞ்ச பாத்ரத்திற்கு நாலு புறமும் சந்தநமிட்டு உள்ளே ஒரு புஷ்பத்தைப் போட்டு வலது கையால் மூடிக் கொண்டு கீழ்வரும் சுலோகங்களைக் கூறி அந்தப் புஷ்பத்தால் பூஜா த்ரவ்யங்களையும் தன்னையும் ப்ரோக்ஷிக்க வேண்டும்.)

கலசஸ்ய முகே2 விஷ்ணு : கண்டே2 ருத்ர: ஸமாச்ரித:
மூலே தத்ர ஸ்தி2தோ பிரும்மா மத்4யே மாத்ரு க3ணாஸ் ம்ருதா:
குக்ஷௌது ஸாக3ரா: ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்த4ரா
ரிக் வேதோ2த2 யஜுர்வேத: ஸாம வேதோப் யத4ர்வண:
அங்கைச்ச ஸஹிதா: ஸர்வே கலசாம்பு3ஸமாச்ரிதா:
கங்கே ச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி-
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு
ஆகமார்த்2தந்து தேவாநாம்—க3மநார்த்தந்து ரக்ஷஸாம்
குரு க4ண்டாரவம் தத்ர தேவதாஹ்வாந லாஞ்சநம்,
என்று கூறி மணியை அடிக்கவும்.

# த்யாநம்

1. சந்த்ர கோடி ப்ரதீகாசம்-த்ரிநேத்ரம் சந்த்ர பூ4ஷணம் ।
ஆபிங்கள ஜடாஜூடம் ரத்ந மௌலி விராஜிதம் ॥
நீலக்ரீவம் உதா3ராங்கம் தாரஹாரோப சோபி4தம் ।
வரத3ாபய ஹஸ்தஞ்ச ஹரிணஞ்ச பரச்வத2ம் ॥
தத4ாநம் நாக3 வலயம் கேயூராங்கத3 முத்3ரகம்
வ்யாக்4ர சர்ம பரீத4ாநம் ரத்ந ஸிம்மாஸந ஸ்தி2தம் ॥

(கோடி சந்த்ர ப்ரகாசம் உள்ளவரும், முக்கண்ணனும், சந்த்ரன், சிவந்த ஆடை, ரத்நகிரீடம், கறுத்த கழுத்து, கம்பீர சரீரம், முக்தாஹாரம், வரத அபய ஹஸ்தம், மான், கோடாலி, ஸர்ப்ப வலயம், கேயூரம், அங்கதம், புலித்தோல், இவைகளைத் தரித்து ரத்ந ஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பதாகச் சிவனை த்யானம் செய்ய வேண்டும்.)

2. ஆகச்ச தேவதேவேச மர்த்ய லோக ஹிதேச்சயா।
பூஜயாமி வித 4ாநேந ப்ரஸன்னः ஸுமுகோப4வ ||

உமா மஹேச்வரம் ஆவாஹயாமி (த்ரயம்பகம் கௌரீமிமாய கூறலாம். ப்ராண ப்ரதிஷ்டையும் தெரிந்தால் செய்யலாம்.)

3. பாதஸநம் குரு ப்ராக்ஞ நிர்மலம் ஸ்வர்ண நிர்மிதம்।
பூ4ஷிதம் விவிதை4ः ரத்னைः குரு த்வம் பாது3 காஸநம்||

உமா மஹேச்வராய நமः ரத்நாஸநம் ஸமர்ப்பயாமி.

4. கங்காதி ஸர்வ தீர்த்தேப்4யः மயா ப்ரார்த்த நயாஹ்ருதம்।
தோயம் ஏதத் ஸுக ஸ்பர்சம் பாத்யார்த்தம் ப்ரதிக்3 ருஹ்யதாம்||

உமா மஹேச்வராய நமः பாத்யம் ஸமர்ப்பயாமி.

5. கந்தே4ாதகேந புஷ்பேண சந்தநேந ஸுகந்தி4நா।
அர்க்4யம் க்ருஹாண தேவேச பக்திம் மேஹ்யசலாம் குரு||

உமா மஹேச்வராய நமாः அர்க்யம் ஸமர்ப்பயாமி.

6. கர்பூர உசீர ஸுரபி4 சீதளம் விமலம் ஜலம்।
கங்காயாஸ்து ஸமாநீதம் க்ருஹாண ஆசமநீயகம்||

உமா மஹேச்வராய நமः ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.

7. ரஸோஸி ரஸ்ய வர்கேஷே ஸுக ரூபோஸி சங்கர ।
மது பர்க்கம் ஜகந்நாத தஸ்யே துப்4யம் மஹேச்வர ॥

உமா மஹேச்வராய நம: மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி.

8. பயோ த3தி4க்4ருதஞ்சைவ மது4சர்க்கரயாஸமம்
பஞ்சாம்ருதேந ஸ்நபநம் காரயேத்வாம் ஜகத்பதே ॥

உமா மஹேச்வராய நம: பஞ்சாம்ருத ஸ்நாநம் ஸ+மி

9. மந்தாகின்யா: ஸமாநீதம் ஹேம அம்பே4ருஹ
வாஸிதம் ।
ஸ்நாநாய தே மயா பக்த்யா நீரம் ஸ்வீக்ரியதாம்
விபே4ா ॥

உமா மஹேச்வராய நம: சுத்த உதக ஸ்நாநம் ஸ+மி.
ஸ்நாந அநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.

10. வஸ்த்ரம் ஸூக்ஷ்மம் து3கூலேச தேவாநாம்
அபி துர்லபம் ॥
க்ருஹாண த்வம் உமாகாந்த ப்ரஸன்னோ ப4வ
ஸர்வதா3 ॥

உமா மஹேச்வராய நம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி.

11. யக்ஞோபவீதம் ஸஹஜம் ப்ரும்மணா நிர்மிதம் புரா ।
ஆயுஷ்யம் ப4வ வர்ச்சஸ்யம் உபவீதம் க்ருஹாண
பே4ா ॥

உமா மஹேச்வராய நம: யக்ஞோபவீதம் ஸ்+மி

12. ஸ்ரீக2ண்ட3ம் சந்தநம் திவ்யம் கந்த4ா ட்4யம்
ஸுமனோஹரம் ।
விலேபநம் ஸுரச்ரேஷ்ட2 மத்3தத்தம்
ப்ரதிக்ருஹ்யதாம் ।

உமா மஹேச்வராய நம: கந்தம் ஸமர்ப்பயாமி.

13. அக்ஷதான் சந்த்ர வர்ணப4ான் சாலேயான் ஸ்திலான் சுப4ான் ||
அலங்காரார்த்த2ம் ஆநீதான் த4ாரயஸ்வ மஹாப்ரபோ ||
உமா மஹேச்வராய நம: அக்ஷதான் ஸமர்ப்பயாமி.

14. மால்யாதீ3நி ஸுகந்தீநி மாலத்யாதீநி வை ப்ரபோ |
மயா ஆஹ்ருதாநி புஷ்பாணி பூஜார்த்த2ம் தவ சங்கர ||
உமா மஹேச்வராய நம: புஷ்பமாலாம் ஸ+மி.

# அங்க பூஜா

| | | | |
|---|---|---|---|
| சிவாய | நம: | பாதௌ | பூஜயாமி |
| சர்வாய | ,, | குல்பௌ4 | ,, |
| ருத்ராய | ,, | ஜாநுநீ | ,, |
| ஈசாநாய | ,, | ஜங்கே4 | ,, |
| பரமாத்மனே | ,, | ஊரு | ,, |
| ஹராய | ,, | ஜக4நம் | ,, |
| ஈச்வராய | ,, | குஹ்யம் | ,, |
| ஸ்வர்ண ரேதஸே | ,, | கடிம் | ,, |
| மஹேச்வராய | ,, | நாபிம் | ,, |
| பரமேச்வராய | ,, | உதரம் | ,, |
| ஸ்படிக ஆபரணாய | ,, | வக்ஷஸ்த2லம் | ,, |
| த்ரிபுர ஹந்த்ரே | ,, | பாஹூன் | ,, |
| ஸர்வ அஸ்த்ர தாரிணே | ,, | ஹஸ்தான் | ,, |
| நீலகண்டாய | ,, | கண்டம் | ,, |
| வாசஸ்பதயே | ,, | முகம் | ,, |
| த்ரயம் பகாய | ,, | நேத்ராணி | ,, |
| ப2ால சந்த்ராய | ,, | லலாடம் | ,, |
| கங்காதராய | ,, | ஜடாமண்டலம் | ,, |
| ஸதாசிவாய | ,, | சிர: | ,, |
| ஸர்வேச்வராய | ,, | ஸர்வாணி அங்காணி | ,, |

# அஷ்டோத்தர நாம அர்ச்சனை

ஒவ்வொரு நாமாவின் ஆரம்பத்தில் ஓம் என்றும் முடிவில் நம: என்றும் சேர்த்து அர்ச்சனை செய்யவும். ஸ்த்ரீகள் ஓம் என்பதைக் கூறக் கூடாது. ஹ்ரீம் என்பதைக் கூறலாம்.

1 ஓம் சிவாய நம:
2 மஹேச்வராய
3 சம்பவே
4 பிநாகிநே
5 சசிசேக2ராய
6 வாம தேவாய
7 விரூபாக்ஷாய
8 கபர்திநே
9 நீலலோஹிதாய
10 சங்கராய
11 சூல பாணயே
12 க2ட்வாங்கிநே
13 விஷ்ணுவல்லப4ாய
14 சிபி விஷ்டாய
15 அம்பிகா நாதாய
16 ஸ்ரீ கண்ட2ாய
17 பக்த வத்ஸலாய
18 ப4வாய
19 சர்வாய
20 த்ரிலோகேசாய
21 சிதி கண்ட2ாய
22 சிவா ப்ரியாய
23 உக்ராய
24 கபர்திநே
25 காமாரயே
26 அந்த4க அஸுர ஸூதநாய
27 கங்காதராய
28 லலாடாக்ஷாய
29 கால காலாய
30 க்ருபாநிதயே
31 பீ4மாய
32 பரசு ஹஸ்தாய
33 ம்ருகபாணயே
34 ஜடாதராய
35 கைலாச வாஸிநே
36 கவசிநே
37 கடே2ாராய
38 த்ரிபுராந்தகாய
39 வ்ருஷாங்காய
40 வ்ருஷபாரூடாய
41 பஸ்மஉத்தூ4ளித விக்ரஹாய
42 ஸாம ப்ரியாய
43 ஸ்வர மயாய
44 த்ரயீ மூர்த்தயே
45 அநீச்வராய
46 ஸர்வக்ஞாய

47 பரமாத்மநே
48 ஸோம ஸூர்ய
அக்நி லோசநாய
49 ஹவிஷே
50 யக்ஞ மயாய
51 ஸோமாய
52 பஞ்ச வக்த்ராய
53 ஸதா சிவாய
54 விச்வேச்வராய
55 வீர பத்ராய
56 கண நாதாய
57 ப்ரஜா பதயே
58 ஹிரண்ய ரேதஸே
59 துர்த4ர்ஷாய
60 கிரீசாய
61 கிரிசாய
62 அநகாய
63 பு4ஜங்க பூஷணாய
64 ப4ர்க்காய
65 கிரித4ன்வநே
66 கிரிப்ரியாய
67 க்ருத்தி வாஸஸே
68 புராராதயே
69 பகவதே
70 ப்ரமதா அதி4 பாய
71 ம்ருத்யுஞ் ஜயாய
72 ஸூக்ஷ்ம தநவே
73 ஜகத் வ்யாபிநே
74 ஜகத் குரவே
75 வ்யோம கேசாய
76 மஹாஸேந ஜநகாய
77 சாரு விக்ரமாய
78 ருத்ராய
79 பூத பதேய
80 ஸ்தாணவே
81 அஹிர்புத்4னியாய
82 திகம்பராய
83 அஷ்டமூர்த்தயே
84 அநேகாத்மநே
85 ஸாத்விகாய
86 சுத்த விக்ரஹாய
87 சாச்வதாய
88 கண்ட பரசவே
89 அஜாய
90 பாப விமோசநாய
91 ம்ருடாய
92 பசுபதயே
93 தேவாய
94 மஹா தேவாய
95 அவ்யயாய
96 ஹரயே
97 பூஷ தந்த பி4தே
98 அவ்யக்ராய
99 ப4கநேத்ர பி4தே
100 ஹராய
101 தக்ஷஅத்வர
[ஹராய
102 அவ்யக்தாய
103 ஸஹஸ்ராக்ஷாய
104 ஸஹஸ்ர பதே
105 அபவர்க்க ப்ரதாய
106 அநந்தாய
107 தாரகாய
108 பரமேச்வராய

உமா மகேச்வராய நம: அஷ்டோத்ர சத நாமார்ச்சனம் ஸமர்ப்பயாமி.

15. வநஸ்பதிரஸ உத்3பூத: கந்த ஆட்4யச்ச மனோஹர:
ஆக்4ரேய: ஸர்வதேவனாம் துபோயம் ப்ரதி க்ருஹ்ய தாம். ||

உமா மஹேச்வராய நம: தூபம் ஆக்4ராபயாமி.

16. ஸாஜ்யம் த்ரிவர்த்தி ஸம்யுக்தம் வந்ஹிநா யோர்ஜிதம் மயா |
தீபம் க்ருஹாண தேவேச த்ரைலோக்ய திமிராபஹம். ||
உமா மஹேச்வராய நம: தீபம் தர்சயாமி.

ஓம் பூ4ர்ப்4புவஸ்ஸுவ; தத்ஸவிதுர்வரேண்யம், ப4ர்க்கோ3 தேவஸ்ய தீ4மஹி தீ4யோ யோ ந: ப்ரசோதயாத். ஓம் தேவ ஸவித: ப்ரஸுவ். ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமி. அம்ருத உபஸ்தரணமஸி. ஓம் ப்ராணாய ஸ்வாஹா: ஓம் அபானாயஸ்வாஹா. ஓம் வ்யாநாயஸ்வாஹா, ஓம் உதாநாய ஸ்வாஹா, ஓம் ஸமாநாயஸ்வாஹா, ஓம் ப்ரும்ம ணேஸ்வாஹா. ப்ரும்மணிம் ஆத்மா அம்ருதத்வாய (இதைப் பெண்கள் கூறலாகாது) மந்த்ரமில்லாமல் 3 முறை ஜலத்தால் சுத்தி நிவேதநம் செய்க.

17. நைவேத்யம் க்ருஹ்யதாம் தேவ பக்திம் மேஹ்யசலாம் குரு |
சிவேப்ஸிதம் வரம் தேஹி பரத்ரச ப்ரம்கதிம் ||

உமா மஹேச்வராய நம: மஹா நைவேத்தியம் ஸ+மி |

அம்ருதா பிதா4நமஸி நிவேத்யாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி ||

18. ஜூக்3ப்உல ஸமாயுக்தம் நாக3வல்லீ த3ளாய்தம் ||
கற்பூர சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ஸ+மி.

19. சக்ஷுர்த3ம் ஸர்வலோகாநாம் திமிரஸ்ய நிவாரணம் |
ஆர்திக்யம் கல்பிதம் பக்த்யா க்ருஹாண பரமேச்வர ||
உமா மஹேச்வராய நம: நீராஜனம் ஸமர்ப்பயாமி.

20. யாநி காநி ச பாபாநி ப்ரும்மஹத்யா ஸமாநிச |
தாநிதாநி விநச்யந்தி ப்ரதக்ஷிண பதேபதே ||
உமா மஹேச்வராய நம: ப்ரதக்ஷிணம் ஸமர்ப்பயாமி.

21. ஜபுஷ்பாஞ்ஜலிம் ப்ரதாஸ்யாமி க்ருஹாண கருணாநிதே ||
நீலகண்ட விருபாக்ஷ வாமார்த்த4கிரிஜ ப்ரபோ
உமா மஹேச்வராய நம: புஷ்பாஞ்ஜலிம் ஸ+மி.
மந்த்ரபுஷ்பம் ஸுவர்ண புஷ்பம் ஸமர்ப்பயாமி.

22. மந்த்ரஹீநம் க்ரியாஹீனம் பக்திஹீநம் ஸுரேச்
யத்பூஜிதம் மயாதேவ பரிபூர்ணம் ததஸ்துதே ||

1. வந்தே சம்பு4ம் உமாபதிம் ஸுரகுரும் வந்தே,
ஜகத்காரணம் வந்தே பன்னக பூ4ஷணம் ம்ருக
த4ரம் வந்தே பசூநாம் பதிம் |
வந்தே சூர்ய சசாங்க வன்னி நயநம் வந்தே
முகுந்த ப்ரியம் வந்தே ப4க்த ஜநாச்ரயஞ் ச வரதம்
வந்தே சிவம் சங்கரம் ||

2. நமச்சிவய ஸாம்பாய ஸகணாய ஸஸூநவே |
ஸநந்திநே ஸகங்காய ஸவ்ருஷாய நமோ நம: |

3. நமச்சிவாப்யாம் நவ யௌவநாப்4யாம் பரஸ்
பராச்லிஷ்ட வபுர் த4ராப்4யாம் |
நகேந்த்ர கன்யா வ்ருஷ கேதநாப்யாம் நமோ நமச்
சங்கர பார்வதீப்4யாம் ||

சுக்லாம்-சாந்தயே+மமோ-ப்ரீத்யர்த்தம்!

23. மயா ஆசரித சிவராத்ரி வ்ரத பூஜாந்தே
க்ஷீராக்ர்ய ப்ரதாநம் வாயந தாநஞ்ச கரிஷ்யே ||
என்று ஸங்கல்பம் செய்து கை அலம்பி பாலால் 3-முறை
அர்க்யம் அளிக்கவும்.

1. நமோ விச்வ ஸ்வரூபாய விச்வ ஸ்ருஷ்ட்யாதி காரக |
கங்காதர நமஸ்துப்யம் க்ருஹாணார்க்யம் மயார்பிதம் ||
உமா மஹேச்வராய நம: இத3மர்க்4யம், இதமர்க்யம்,
இதமர்க்யம்.

2. நமச்சிவாய சாந்தாய ஸர்வ பாபஹராயச |
சிவராத்ரௌ மயாத3த்தம் க்ருஹாணார்க்4யம் ப்ரஸீத
3மே ||

உமா மஹேச்வராய நம: இதமர்க்யம், இதமர்க்யம்,
இதமர்க்யம்.

3. துக்க2 த3ாரித்ர்ய ப4ர்வைச்ச த3க்கோ4ஹம் பார்வதீ
பதே |
மாம் த்வம் பாஹி மஹாபாஹோ க்ருஹாணார்க்யம்
நமோஸ்துதே ||
உமா மஹேச்வராய நம : இதமர்க்யம், இதமர்க்யம்,
இதமர்க்யம்.

4. சிவாய சிவரூபாய பக்தாநாம் சிவதாயக |
இதம் அர்க்யம் ப்ரதாஸ்யாமி ப்ரஸந்நோ ப4வ ஸர்வதா ||
உமா மஹேச்வராய நம: இதமர்க்யம், இதமர்க்யம்,
இதமர்க்யம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 5. அம்பிகாயை | நம: | ,, | (மூன்று முறை) | |
| 6. ஸுப்ரமண்யாய | ,, | ,, | ,, | ,, |
| 7. நந்திகேசாய | நம: | இதமர்க்யம் | ,, | ,, |
| 8. சண்டிகேசாய | ,, | ,, | ,, | ,, |

அநேந அர்க்ய ப்ரதாநேந உமா மஹேச்வர : ப்ரியதாம்- உமா மஹேச்வர ஸ்வரூபாய ப்ராம்மணாய துப்யம் அஹம் ஸம்ப்ரததே. (தக்ஷிணை தாம்பூலமளிக்கவும்.) இங்ஙனம் 4-யாமமும் செய்வதே நல்லது.

சிவராத்ரி பூஜா கல்பம் முற்றிற்று.

---

# சிவாலய ஸேவா விதி

ஆலயம் தொழுவது சாலவும் நன்று. கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற மூத்தோர் சொல் வார்த்தை அம்ருதம். ஆலயம், கோயில் என்றால் இறைவன் இருப்பிடம். ஆன்மாக்கள் லயிக்கும் இடம் என்று பொருள். எங்கும் ஈச்வரன் இருந்தாலும் உலகத்தவருக்குத் துன்பத்தை நீக்கி, இன்பத்தைத் தர வேத மந்த்ரங்களால் பகவானது அருள் புரியும் சக்தி ஆலயத்திலேயே அதிகமாக அமைக்கப் பட்டுள்ளது. பசுவின் உடலெல்லாம் பால் இருந்தாலும் பாலாகக் கறக்கும் இடம் மடியே. அதேபோல் பகவானது அருளைக் கறக்கும் இடம் ஆலயம்.

காலை, உச்சிவேளை, மாலை இந்த மூன்று காலங்களே ஆலய தர்சனத்திற்கேற்ற காலம். சேவைக்குச் செல்பவர் ஸ்நானம் செய்து மடி உடுத்தி விபூதி அணிந்து, கிடைத்தால் ருத்ராக்ஷம் அணிந்து, தேங்காய், பழம், புஷ்பம், கற்பூரம், எண்ணெய், திரி இவைகளை அல்லது சக்திக்கேற்ற ஒன்றை யாவது எடுத்துப் போகவேண்டும். தேங்காய், பழம், புஷ்பம் இவைகளை ஜலத்தினால் அலம்பி முழங்காலுக்குக் கீழ் தொங்க விடாமல் எடுத்துச் செல்ல வேண்டும். செருப்பு, குடை,

சொக்காய் இவைகளுடன் போகக் கூடாது. நடந்து போவதே நல்லது.

சிவாலயத்தின் அருகிலுள்ள புண்ய தீர்த்தத்தை முதலில் கையால் எடுத்துத் தலைமீது ப்ரோக்ஷித்துக்கொண்டு பிறகு அதில் காலைக் கழுவி ஆசமநம் செய்யவேண்டும். ஆலயம் சென்று திரும்பி வரும் வரை மனதினுல் சிவனைத் தவிர வேறு எதையும் நினைக்கலாகாது. சிவநாமத்தைத் தவிர வேறு எதையும் சொல்லக் கூடாது. த்வஜஸ்தம்பத்தின் அருகே பலிபீடமும் நந்தியும் இருக்கும்.

அங்கே ஸாஷ்டாங்கமாக ஐந்து முறை நமஸ்காரம் செய்யவேண்டும். பெண்களுக்கு பஞ்சாங்க நமஸ்காரமே. இரு கால்கள், இரு கரங்கள், இரு முழங்கால்கள், மார்பு, தலை, மநஸ், வாக்கு, கண் என்பன ஸாஷ்டாங்க நமஸ்காரம். பெண்கள் முழங்கால், தலை, மநஸ், வாக்கு, கண் என்ற பஞ்சாங்க நமஸ்காரம் செய்யவேண்டும். பலிபீடத்தினருகே நான் எனும் அஹங்காரத்தைப் பலிகொடுத்துவிட்டு நந்தி கேசர் அருகே சென்று,

நந்திகேச மஹா ப்ராக்ஞ, சிவ த்யாந பராயண
மஹா தேவஸ்ய ஸேவார்த்தமே அநுக்ஞாம் தாதும் அர்ஹஸி ||

மஹா புத்தி உள்ளவரே சிவ த்யாநத்தில் ஈடுபட்ட ஓ நந்திகேச, சிவ தர்சநம் செய்ய உத்தரவு அளியும் எனக் கேட்டுக் கொண்டு விநாயகரை முதலில் தர்சிக்க வேண்டும்.

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்ந உப சாந்தயே ||

வெள்ளை வஸ்த்ரம் அணிந்து எங்கும் பரவி நிற்பவரும், சந்த்ரனைப் போல் ப்ரகாசமானவரும், நாலு கை உள்ளவரும்

ஸந்தோஷமான முகமுள்ளவருமான விநாயகரை ஸர்வ விக்நங்களும் அகல த்யர்நம் செய்கிறேன் என்று கூறி ஐந்து, முறை குட்டிக் கொண்டு மூன்று தோபகர்ணம் போட வேண்டும்.

திருவும், கல்வியும், சீரும், தழைக்கவும்-கருணை
பூக்கவும், தீமையைக் காய்க்கவும்-பருவமாய்
நமதுள்ளம் பழுக்கவும்- பெருகும் ஆழத்துப்
பிள்ளையைப் பேணுவாம்.

என்று துதித்து முருகன் சன்னதிக்குப் போய்

உமா கோமள ஹஸ்தாப்ஜ-ஸம்பா4வித லலாடிகம்
ஹிரண்ய குண்டலம் வந்தே குமரம் புஷ்கரஸ்ரஜம். ||

பார்வதி கரபத்மத்தால் நெற்றியைத் தடவ ஸ்வர்ண குண்டலம் அணிந்து, தாமரை மாலை அணிந்திருக்கும் ஸ்கந்தனை நமஸ்கரிக்கிறேன்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குஹனே

என்று துதித்து தேவி ஸன்னதிக்குச் செல்ல வேண்டும்.

சதுர்புஜே சந்த்ர கலாவதம்ஸே குசோன்னதே
குங்கும ராகசோணே |
புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாண ஹஸ்தே நமஸ்தே
ஜகதேக மாத: ||

நாலு கைகள் உள்ளவளே! சந்த்ர கலை தரித்தவளே! உன்னதமான மார்புள்ளவளே! குங்குமம்போல் சிவந்தவளே!

நாமக்கரும்பு, பாசம், அங்குசம், புஷ்ப பாணம் இவைகளைக் கரத்தில் ஏந்தியவளே! ஜகன் மாதாவே! உமக்கு நமஸ்காரம்.

தநம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வு அறியா
மனம்தரும் தெய்வ வடிவம் தரும் எல்லாம் தரும் அன்பர் வஞ்சமிலா
இநம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கநம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்ணே.

என்று துதித்து சிவ ஸன்னதிக்குப் போக வேண்டும்.

ப்ரம்ம முராரி ஸுரார்ச்சித லிங்கம்
நிர்மல பா4ஷித சோபித லிங்கம் |
ஜன்மஜ துக்க விநாசக லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம் ||

ப்ரும்மா, விஷ்ணு முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டவரும், வேதத்தால் ப்ரகாசமானவரும், ஜநந, மரண துக்கத்தை அகற்றுபவருமான ஸதாசிவ லிங்கத்தை நமஸ்கரிக்கிறேன்.

கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாக
பாதத்தைத் தொழுநின்ற பரஞ்சோதி பயிலுமிடம் |
வேதத்தின் மந்திரத்தால் வெண் மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புற்றிருக்கு வேளூரே ||

என்று பாடி சிவனுக்கு 4 திக்குகளிலும் ஸத்யோ ஜாத, தத்புருஷ, அகோர, வாமதேவ என்ற முகங்கள் இருப்பதாகவும், ஈசாநம் என்ற முகம் மேனோக்கியுள்ளது, நம்மைக்காக்க குனிந்து நம்மைக் கடாக்ஷிப்பதாகவும் எண்ண வேண்டும். சிவனிடம் அனைவரும் ப்ரார்த்திக்க வேண்டிய ச்லோகம்.

நடராஜரிடம்:

அநாயாஸேந மரணம், விநா தைந்யேந ஜீவநம் ।
தேஹிமே க்ருபயா சம்போ, த்வயி பக்திம் அச்ஞ்சலாம் ॥

ஆயாஸம் இல்லாத மரணம், ஏழ்மை இல்லாத ஜீவனம், உன்னிடம் சஞ்சலமில்லாத பக்தி இவைகளை எனக்குத் தயை யோடு அளியும்.

இரண்டாவது ப்ரதக்ஷிணத்தில் நடராஜர், ஸோமாஸ்கந்தர், சந்த்ரசேகரர் இவர்களைத் தரிசிக்க வேண்டும்.

க்ருபா ஸமுத்ரம் ஸுமுகம் த்ரிநேத்ரம்
ஜடாதரம் பார்வதி வாம பாகம் ।
ஸதாசிவம் ருத்ரம் அநந்த ரூபம்
சிதம்பரேசம் ஹ்ருதி பாவயாமி ॥

கருணைக் கடல், ஸுமுகன், முக்கண்ணன், ஜடாதாரி, இடது புறம் பார்வதியை வைத்திருப்பவன் ஸதாசிவனை சிதம்பரேசனை த்யாநம் செய்கிறேன்.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் ஜோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

என்று கூறி மூன்றாவது ப்ரதக்ஷிணத்தில் தக்ஷிணா மூர்த்தியைத் தர்சித்து,

குருர் ப்ரும்மா குருர் விஷ்ணு: । குரு தேவ மஹேச்வர:।
குரு: ஸாக்ஷாத் பரப்ரும்ம, தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥

என்று கூறி அவர் ஸன்னதியில் உபதேசம் ஆனவர் பஞ்சாக்ஷரீ ஜபம் செய்யலாம்.

சண்டிகேசரிடம் சென்று மெதுவாக மூன்று முறை கையைத் தட்ட வேண்டும்.

நீலகண்ட2 பதாம்பே4ாஜ பரிஸ்பு2ரித மனஸே |
சம்போ: ஸேவாப2லம் தேஹி சண்டிகேச நமோஸ்துதே.

சிவன் திருவடியில் ஸதா மனதைச் செலுத்திய சண்டிகேச! சிவ்ஸேவையின் பலனைத் தாரும். (ஓங்கிச் சத்தம் செய்து அவர் சிவ த்யாநத்தைக் கலைக்கக் கூடாது.)

பைரவரைத் தரிசித்து விட்டு மறுபடி நந்தியின் பின்புறத்திலிருந்து சிவலிங்கத்தைத் தர்சநம் செய்துவிட்டு கோபுரவாசற் படியில் சிறிது உட்கார்ந்து,

மஹாபலி முக2ாஸ் ஸர்வே சிவாக்ஞா பரிபாலகா :
மயா நிவர்த்திதா யூயம் கச்சத்4வம் சிவஸன்னதிம்.

மஹாபலி முதலிய சிவ ஸேவகர்களே என்னுடன் வந்து சிவ தர்சநம் செய்வித்த நீங்கள் உள்ளே செல்லுங்கள். நான் போய் வருகிறேன் எனக் கூறி வீட்டிற்குச் செல்ல வேண்டும். வீட்டிற்கு வந்தவுடன் சிறிது நேரம் உட்கார்ந்து பிறகே கால் அலம்ப வேண்டும்.

நந்திக்கும் சிவனுக்கும், தேவிக்கும் சிவனுக்கும் குறுக்கே சென்றால் ஏற்கனவே செய்த புண்யமும் போய்விடும்.

மெதுவாக மூன்று ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். த்வஜஸ்தம்பத்தினருகில்தான் நமஸ்கரிக்கலாம். மற்றவிடத்தில் கூடாது. கோவிலில் பேசக் கூடாது. சிரிக்கக் கூடாது. எச்சில் துப்பக் கூடாது.

சுபம் சுபம் சுபம்

# ஸ்ரீ வைத்யநாத ஸ்தோத்ரம்

ஸ்ரீ பாலாம்பிகே ஸமேத வைத்யநாத ஸ்வாமிநே நம:

ஸ்ரீ ராம ஸௌமித்ரி, ஜடாயுவேத
ஷடாநந நாதித்ய, குஜார்ச்சி தாய
ஸ்ரீ நீலகண்டாய, தாயமயாய
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 1

கங்கா ப்ரவாஹேந்து, ஜடாதராய
த்ரிலோச நாய ஸ்மரகால ஹந்த்ரே,
ஸமஸ்த தேவைரபி பூஜிதாய
ஸ்ரீ வைத்ய நாதாய நம: சிவாய. 2

பக்தப்ரியாய த்ரிபுராந்தகாய
பிநாகிநே, துஷ்ட ஹராய நித்யம்,
ப்ரத்யக்ஷலீலாய, மனுஷ்ய லோகே
ஸ்ரீ வைத்ய நாதாய நம: சிவாய. 3

ப்ரபூதவர தாதி, ஸமஸ்த ரோக
ப்ரணாசகர்த்ரே, முநிவந்திதாய,
ப்ரபாகரேந்த்வக்நி, விலோசனாய
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 4

வாக், ச்ரோத்ர, நேத்ராங்க்ரி விஹீநஜந்தோ:
வாக், ச்ரோத்ர, நேத்ராங்க்ரி முகப்ரதாய,
குஷ்டாதி, ஸர்வோன்னத ரோக ஹந்த்ரே,
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 5

வேதாந்த வேத்யாய ஜகன்மயாய
யோகீச்வரத்யேய பதாம்பு ஜாய,
த்ரிமூர்த்தி ரூபாய ஸஹஸ்ர நாம்நே
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 6

ஸ்வதீர்த்த, ம்ருத், பஸ்மப்ருதங்க பாஜாம்,
பிசாச துக்கார்த்தி பயாபஹாய,
ஆத்ம ஸ்வரூபாய சரீர பாஜாம்
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 7

ஸ்ரீ நீலகண்டாய, வ்ருஷத்வஜாய,
ஸ்ரக், கந்த, பஸ்மாத்யபி சோபிதாய,
ஸுபுத்ரதாராதி ஸௌபாக்யதாய,
ஸ்ரீ வைத்யநாதாய நம: சிவாய. 8

ஸ்வாமின், ஸர்வ ஜகந்நாத,
ஸர்வரோக சிகித்ஸக
க்ஷுத்ரரோஜ பயார்த்தான்,
நஸ்த்ராஹி த்ராஹி மஹாப்ரபோ. 9

அசிகித்ஸா சிகித்ஸாய
சாத்யந்த ரஹிதாயச,
ஸர்வலோகைக வந்த்யாய
வைத்ய நாதாய தே நம: 10

அப்ரமேயாய மஹதே
ஸுப்ரஸன்ன முகாய ச,
அபீஷ்ட தாயிநே நித்யம்
வைத்யநாதாய தே நம. 11

ம்ருத்யுஞ் ஜயாய, சர்வாய
ம்ருடாநீ வாமபாகி நே,
வேதவேத்யாய, ருத்ராய
வைத்யநாதாய தே நம: 12

ஸ்ரீ ராமபத்ர வந்த்யாய
ஜகதாம் ஹிதகாரிணே
ஸோமார்த்த தாரிணே துப்யம்,
வைத்யநாதாய தே நம: 13

நீலகண்டாய ஸௌமித்ரி
பூஜிதாய ம்ருடாயச,
சந்த்ர வஹ்ந்யர்க்க நேத்ராய
வைத்யநாதாய தே நம: 14

சிகிவாஹந வந்த்யாய
ஸ்ருஷ்டி, ஸ்நித்யந்தகாரிணே,
மணிமந்த்ரௌஷ தேசாய,
வைத்யநாதாய தே நம: 15

க்ருத்ர ராஜாபி வந்த்யாய
திவ்ய கங்காதராய ச,
ஜகந்மயாய: ஸர்வாய
வைத்யநாதாய தே நம: 16

குஜ, வேத, விதீந்த்ராத்யை
பூஜிதாய, சிதாத்மநே,
ஆதித்ய, சந்த்ர வந்த்யாய,
வைத்யநாதாய தே நம: 17

வேதவேத்ய, க்ருபாதார,
ஜகந்மூர்த்தே சுபப்ரத,
அநாதி வைத்ய, ஸர்வஜ்ஞ,
வைத்யநாத நமோஸ்து தே. 18
கங்காதர, மஹாதேவ
சந்த்ர வஹ்ந்யர்க்க, லோசன,
பிநாகபாணே, விச்வேச,
வைத்யநாத நமோஸ்து தே. 19
வ்ருஷவாஹந, தேவேச,
அசிகித்சா சிகித்ஸக,
கருணாகர கௌரீச
வைத்யநாத நமோஸ்து தே. 20
விதி விஷ்ணு முகைர் தேவை:
அர்ச்யமான பதாம் புஜ,
அப்ரமேய ஹரேசாந
வைத்யநாத நமோஸ்து தே. 21
ராம லக்ஷ்மண ஸூர்யேந்து
ஜடாயு ச்ருதி பூஜித
மதநாந்தக ஸர்வேச,
வைத்யநாத நமோஸ்து தே. 22
ப்ரபஞ்ச பிஷக்கீசாந
நீலகண்ட மஹேச்வர
விச்வநாத மஹா தேவ
வைத்யநாத நமோஸ்து தே. 23
உமாபதே லோகநாத
மணி மந்த்ரௌஷ தேச்வர,
தீநபந்தோ, தயாசிந்தோ
வைத்யநாத நமோஸ்து தே. 24
த்ரிகுணா தீத சித்ரூப
தபாத்ரய விமோசந,
விருபாக்ஷ, ஜகந்நாத
வைத்யநாத நமோஸ்து தே. 25
பூதப்ரேத பிசாசாதே:
உச்சாடந விசக்ஷண,
குஷ்டாதி ஸர்வ ரோகாணாம்
ஸம்ஹர்த்ரே தே நமோ நம. 26
ஜாத்யந்த பங்கு குப்ஜா தேர்
திவ்யரூப ப்ரதாயிநே,
அநேக மூக ஜந்தூநாம்
திவ்யவாக் தாயிதே நம: 27